SRI MUNU ADHI : தலைவர் அவர்களே, லேபர் ரிலேஷன்ஸ் ஆபீசர் மாவட்ட ரீதியாக நியமிக்கப்படுவாரா ? அல்லது மாநில ரீதியில் நியமிக்கப்படுவாரா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மாநில ரீதியாக நியமனம் செய்ய ஒரே ஒரு லேபர் ரிலேஷன்ஸ் ஆபீசர் தான் நியமிக்கப்படுகின்றார். மாநிலம் பூராவும் அவர் வேலை செய்வார்.

SRI M. KALYANASUNDARAM : இந்த தொழிலாளர் நல இலாகா அதிகாரியினுடைய பணிகள் என்னென்ன, கடமைகள் என்னென்ன, அதிகாரங்கள் என்னென்ன, என்று வரையறுக்கப்பட்டு உள்ளதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மற்ற ஸ்தாபனங்களிலே லேபர் ரிலேஷன்ஸ் ஆபீசர் எந்தமாதிரி வேலை செய்வாரோ, அதே மாதிரி தான் இவரும் வேலை செய்வார்.

## *Loans to Agriculturists*

* 39 *Q.*—SRI K. A. MATHIALAGAN (on behalf of Sri S. Madhavan) : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the various loans granted to agriculturists by the Government through the Panchayat Union Councils;

(*b*) the principles adopted in granting those loans; and

(*c*) the amounts granted under each head of the loans in the years 1959–60 and 1960–61?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No loans to agriculturists are granted through the Panchayat Union Councils

(*b*) & (*c*) Do not arise.

SRI V. S. S. MANI : தலைவர் அவர்களே, விவசாயிகள் கடன் தொகை வாங்குவதிலே காலதாமதம் ஏற்படுகின்றது. இருபத்தைந்து சதம் வரை உழவர்களுக்கு இதற்காக அலுவலகத்தில் செலவு ஏற்படுகின்றது என்பது அரசினருக்குத் தெரிய வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கடன் தொகை கொடுப்பதிலே பரிசீலனை செய்யப்பட்டு எவ்வளவுதூரம் கடன் கொடுக்கலாம், எவ்வளவு தூரம் அவர் கடன் வாங்குவதற்கு சக்தி இருக்கிறது என்பதை பரிசீலனை செய்து, கடன் கொடுக்கப்படுகிறது. அந்த அளவிலேதான் தாமதம் ஏற்படுகிறது. வேறு வகையிலே தாமதம் ஏற்படுவதாகத் தெரியவில்லை. ஆகவே, எந்த வகையிலே தாமதம் ஏற்படுகிறது என்பதை குறிப்பிட்டு கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னால், மேற்கொண்டு அதில் கவனம் செலுத்தி, வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படும். இந்த கடன் தொகை பெறுவதிலே எவ்வளவு செலவாகும் என்கிற தகவல் என்னிடம் இல்லை.

SRI A. DURAIYARASAN : ஸார், கொடுக்கப்பட்டிருக்கிற கடன்கள் பாதிக்கப்பட்ட பிரேதேசங்களிலே இருந்து மேற்கொண்டும் இந்த கடன்களை ஒத்தி வைக்க வேண்டுமென்று அரசாங்கத்திற்கு மனு செய்திருக்கிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது வேறு விஷயம். அதுபற்றி தனியாக கேள்வி கேட்கவேண்டும். அதுவும் குறிப்பாக கேட்க வேண்டும். இந்த இடத்திலிருந்து தள்ளி வைக்க வேண்டுமென்று மனு செய்யப்பட்டு இருக்கிறதா என்று இடத்தை குறிப்பிட்டுக் கேட்டால், அதற்கு விடை அளிக்கலாம்.

SRI C. CHIRANJEEVULU NAIDU : Sir, in view of the fact that these loans are granted to agriculturists through several agencies, will the Government consider the desirability of channelling these loans only through one agency?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, as far as possible loans will be channelled through the co-operative societies but it is not possible to restrict it to one agency only just at present.

SRI A. THANGAVELU : தலைவர் அவர்களே, கடன் பத்திரங்களில் கையெழுத்து போடுவதில் கிராம அதிகாரிகள் பல தொல்லைகள் கொடுப்பதாக சொல்லப்படுகிறது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எந்தவிதமான தொல்லைகள் கொடுக்கப்படுகிறது என்பதை குறிப்பாகத் தெரிவித்தால் மேற்கொண்டு அதிலே கவனம் செலுத்தப்படும்.

SRI M. KAMALANATHAN : கடன் கொடுக்கப்படுவதற்கு முன் இப்படிப்பட்ட கடன்கள் கொடுக்கப்படுமென்று, நல்ல முறையிலே விளம்பரம் செய்ய ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கடன்கள் பலவிதமான வகையில் விவசாயிகளுக்கு கொடுக்கப்பட்டு வருகின்றன. அதைப் பெருவதிலும் விவ்சாயிகள் விவரம் அறிந்து, நன்கு தெரிந்து பெற்றுக்கொண்டு வருகிறார்கள். மேற்கொண்டு விவரம் தெரிய வேண்டுமானால், அதிகாரிகளைக் கேட்டு தெரிந்து கொள்ளலாம்.

SRI V. S. S. MANI : யூனியன் கவுன்சில்களுக்கு ஒதுக்கப்படும் தொகை எந்த அடிப்படையில் ஒதுக்கப்படுகிறது ? எல்லா கவுன்சில்களுக்கும் ஒரேமாதிரியாக கொடுக்கப்படுகிறதா அல்லது இதிலே டிஸ்பாரிடி அல்லது வித்தியாசம் உண்டா என்பதைப் பற்றி தெரிவிக்கமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : யூனியன்களுக்கு கொடுக்கப்படுகின்ற மானியங்கள் விவரங்கள் எந்த அடிப்படையிலே அளிக்கப்படுகின்றது என்பதைப்பற்றி அறிவிக்கப்பட்டிருக்கிறது. மேலும் விவரங்கள் வேண்டுமென்றால் தனியாக கேள்வி போட்டால் சொல்லலாம். ஒரே அடிப்படையின்கீழ்தான் கொடுக்கப்படுகின்றது. யூனியனுக்கு யூனியன் அடிப்படையிலே வித்தியாசம் இருக்காது. ஆனால் தொகையிலே வித்தியாசம் இருக்கும்.

SRI M. P. VADIVELU : மூன்றுவது பாட்சு பஞ்சாயத்து யூனியன்களுக்கு எப்பொழுதிலிருந்து, எவ்வளவு கடன் வழங்கப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி தனியாக கேள்வி கேட்டால், பதில் சொல்ல முடியும்.

SRI MUNU ADHI : தலைவர் அவர்களே, விவசாயிகளுக்கு குறைந்த கால தவணைகளாகக் கொடுக்கப்படும் கடன்களை, நீண்டகாலத் தவணைகளாகக் கொடுப்பதற்கு ஏதாவது உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நீண்டகாலத் தவணை, குறைந்த காலத் தவணை ஆகிய இரண்டுவிதக் கடன்களும் உண்டு. உதாரணமாக, உரம் வாங்குவதற்காக கடன் கொடுப்பது என்றால் அதை 10, 12 வருஷத் தவணைகளாகச் செய்யமுடியாது. காரணம், உரம் வருஷா வருஷம் வாங்குவதாகும். ஆகவே, அது குறைந்தகால கடனாகத்தான் இருக்கவேண்டும்.